மலர் 15 இதழ் 37

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd. M No. 7897

Phone No. 76190, 76198



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 18—10—74 வெள்ளி

வெளியூர் 19—10—74 சனி



## போராட்டத்தில் திடீர் திருப்பம்

# எம். ஜி. ஆர். வீட்டு முன் உண்ணுவிரதம்

## சத்தியா ஸ்டுடியோ நிர்வாகத்துக்கு தொழிலாளர் இறுதி எச்சரிக்கை

**சென்னை, அக். 18—கடந்த இரண்டு மாதங்களுக்குமேல் வேலை நிறுத்தம் செய்துவரும் சத்தியா ஸ்டுடியோ தொழிலாளர்கள் போராட்டத்தில் திடீர் திருப்பம் ஏற்பட்டுள்ளது. எம். ஜி. ஆர். வீட்டு முன்பு உண்ணுவிரதம் இருக்கப்போவதாக தொழிலாளர்கள் இறுதி எச்சரிக்கை விடுத்திருக்கின்றனர்.**

**இந்த மாதம் 21-ம் தேதிக்குள் தங்களிடம் சமரசத்திற்கு வராவிட்டால் 22-ம் தேதி முதல் உண்ணுவிரதப் போராட்டம் ஆரம்பிக்கப்படும் என்றும் தொழிலாளர்கள் எச்சரித்துள்ளனர்.**

எம். ஜி. ஆர். விடு அமைந்திருக்கும் எம். ஜி. ஆர். தோட்டம் முன் உண்ணுவிரதப் போராட்டம் நடத்தப்போவதாக, சத்தியா ஸ்டுடியோ தொழிலாளர் சங்க தலைவர் வி. முனுசாமி இன்று ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளார்.

அதில் கூறப்பட்டிருப்பதாவது:—

சத்தியா ஸ்டுடியோ தொழிலாளர்கள் கடந்த 15-8-74 முதல் ஸ்டுடியோ முன்பு போராட்டம் நடத்தி வருகிருர்கள்.

ஆனல் இன்றுவரை நிர்வாகத்தினர் எந்தவிதப் பேச்சு வார்த்தைக்கும் முன்வர வில்லை.

இதுவரை ஸ்டுடியோ முன்பு உண்ணுவிரதம் இருந்து வந்த நாங்கள், இனிமேல் நந்தம் பாக்கத்தில் உள்ள எம். ஜி. ஆர். வீட்டுமுன்பு உண்ணுவிரதம் இருப்பது என்று முடிவு செய்திருக்கிருேம்.

### எச்சரிக்கை

தொழிலாளர்களுடன் சமரசப் பேச்சுவார்த்தை நடத்தி பிரச்சினைக்குப் பரிகாரம் காணுமாறு இந்த மாதம் 21-ம் தேதிவரை நிர்வாகத்தினருக்கு அவகாசம் அளித்திருக்கிருேம்.

அதற்குள் பேச்சு வார்த்தைக்கு முன் வரவில்லையென்ருல் எம்.ஜி.ஆர். வீட்டு முன் உண்ணு விரதம் ஆரம்பிக்கப்படும் என்று எச்சரிக்க விரும்புகிருேம்.

22-ம் தேதி யன்று ஐ. என். டி. யு. சி. பொதுச்செயலாளர் ஆர். ரெங்கசாமி முன்னிலையில் உண்ணுவிரதம் ஆரம்பிக்கப்படும்.

மேற்கண்டவாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

7-ம் பத்தித் தொடர்ச்சி

நன்ருக உணர்ந்து இருக்கிருர்கள். ராமையாவை ஆதரிக்கும் எண்ணிக்கை மிகவும் குறைவு.

இந்த நிலையில் விவகாரத்தை எப்படித் தீர்ப்பது என்பது பற்றி மேலிடத் தலைவர்கள் ஆலோசனை நடத்தினர்கள்.

### இந்திரா யோசனை

ஒத்திவைக்கப்பட்டுள்ள கோபிக் கூட்டம் நடக்கும் போது நிச்சயம் ராமையாமீது நம்பிக்கை இல்லா தீர்மானம் நிறைவேற்றப்படும் என்பதில் சந்தேகம் இல்லை. இதை மேலிடம் நன்ருக உணர்ந்து இருக்கிறது.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் தமிழக இந்திரா காங்கிரசில் மேலும் குழப்பங்களும், குரோதங்களும் வளராமல் தடுத்து நிறுத்த புதிய யோசனை ஒன்றை பிரதமர் ராமையாவிடம் தெரிவித்து இருப்பதாகக் கூறப்படுகிறது. நம்பிக்கை இல்லா தீர்மானம் கொண்டுவந்து வெளியேற்றப்படுவது நன்ருக இராது. இதனல் கட்சியின் வளர்ச்சி கூட பாதகம் ஆகக்கூடும்.

ஆகவே கோபிக் கூட்டம் நடப்பதற்கு முன்பே ராமையா தாஞகவே ராஜிநாமா செய்துவிடவேண்டும்.

அப்படி அவர் ராஜிநாமா செய்துவிட்டால் ராமையா எதிர்ப்பு ஓய்ந்துவிடும்என்பதுபிரதமரின்புதிய திட்டம்.

### ராஜிஞமா உறுதி

இத்திட்டப்படி ராமையா டெல்லியில் இருந்து திரும்பி சென்னைக்கு வந்ததும் ராஜிநாமா அறிவிப்பை வெளியிடுவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

ராமையா ராஜிஞமாவுக்குப் பிறகு நிலைமை என்ன என்பது பற்றி அடுத்த வாரத்தில் மேலிடம் முடிவு எடுக்கும்.

புதிய தலைவரை கோபிக் கூட்டம் தேர்ந்து எடுக்க அனுமதிப்பதா? அல்லது இடைக்காலமாக கொஞ்ச காலத்திற்கு அட்டாக் கமிட்டியை நியமிப்பதா? என்பது பற்றி மேலிடம் விரைவில் அறிவிக்கும்.

## சீட்டு கம்பேனி மீது மோசடி புகார்

சென்னை, அக். 18—சுதர்சன் சீட்டு கம்பெனியின் புரசைவாக்கம் கிளை மீது மோசடி புகார் வந்துள்ளது. இது பற்றி புலன் விசாரித்து வருகிருேம் என்று இன்று சென்னையில் ஒரு உயர்தர போலீஸ் அதிகாரி கூறினர்.

## ராமையா ராஜினமா: இந்திரா திடீர் உத்தரவு

சென்னை, அக். 18—தமிழ் நாடு இந்திரா காங்கிரஸ் தலைவர் வி. ராமையாவை பதவி நீக்கக் கோரும் பிரச்னையில் இப்போது திடீர் திருப்பம் ஒன்று ஏற்பட்டுள்ளது.

ராமையாவை தலைவர் பதவியில் இருந்து அகற்ற முன்னுள் முதல்வர் பக்தவத்சலம் தலைமையில் எதிர்ப்பாளர் கோஷ்டி தீவிரமாக வேலை செய்வது தெரிந்ததே.

ராமையா விவகாரத்தில் ஒரு முடிவைக்காண தமிழ் நாடு இந்திரா காங்கிரசின் பொதுக் குழு கோபிச்செட்டிப்பாளையத்தில் இன்றும், நாளையும் (18, 19 தேதிகளில்) கூடுவதாக இருந்தது.

இந்திரா காங்கிரசின் மேலிட கமிட்டிக் கூட்டம் 19-ம் தேதி கூடுவதால் கோபிக் கூட்டத்தை சில நாட்களுக்கு ஒத்திவைக்கும்படி கட்டளை இட்டது.

அதன்பேரில் கோபிக் கூட்டம் தாற்காலிகமாக ஒத்திவைக்கப்பட்டு இருக்கிறது.

### டெல்லி பயணம்

இதற்கிடையில் வி. ராமையாவை டெல்லி மேலிடத் தலைவர்கள் அவசரமாக அழைத்தார்கள்.

டெல்லிக்கு விரைந்துள்ள ராமையா மேலிடத் தலைவர்களை சந்தித்துப் பேசினர்.

பிரதமர் இந்திரா காந்தி, காங்கிரஸ் தலைவராக இருந்த சங்கர் தயாள் சர்மா, சி. சுப்பிரமணியம், காங்கிரஸ் தலைவராக வர இருக்கும் பருவா ஆகியோரை சந்தித்து பேசினர்.

நாளை 19-ம் தேதி நடக்க இருக்கும் மேலிடக்கமிட்டிக் கூட்டத்தில் பருவா காங்கிரஸ் தலைவராக தேர்ந்து எடுக்கப்படுகிருர்.

நாளைய கூட்டத்தில் தமிழ் நாட்டுப்பூசல் பற்றியும் விவாதம் நடக்கும். ஆனல் முடிவு எதையும் அறிவிக்கமாட்டார்கள். என்று டெல்லித் தகவல் ஒன்று கூறுகிறது.

தமிழகத்தில் ராமையா எதிர்ப்பு பலமாக இருப்பதை மேலிடமும், பிரதமரும்

1-ம் பத்தி பார்க்க.

## மொட்டை அடித்து கழுதைமேல் ஊர்வலம்

தார், அக். 18— கொலை செய்ததாக சந்தேகப்பட்ட 2 பேரை கிராம மக்கள் பிடித்து, மொட்டை அடித்து முகத்தில் கரி பூசி பின்னர் கழுதையில் ஏற்றி ஊர்வலமாக அழைத்துச் சென்ருர்கள்.

இந்த சம்பவம் போபால் அருகில் உள்ள ஒரு கிராமத்தில் நடந்தது. தாதிகான் என்ற கிராமத்தில் கடந்த 2-ம் தேதி ஒருவர் கொலை செய்யப்பட்டார். இந்த கொலை சம்பந்தமாக கேசர் சிங், மஞேகர் சிங் பண்டாரி ஆகிய 2 பேரையும் கிராம மக்கள் சந்தேகப்பட்டனர். அந்த 2 பேரையும் பிடித்து தலையை மொட்டை அடித்து முகத்தில் கரி பூசி கழுதையில் ஏற்றி ஊர்வலமாகச் ஏற்றிச் சென்ருர்கள். அவர்களுடைய முதுகில், 'நான் கொலையாளி' என்று எழுதப்பட்ட ஒரு அட்டையும் ஒட்டிவைத்திருந்தார்கள்.

தமிழ்நாட்டில்

## கடத்தல்: இதுவரை 48 பேர் கைது

சென்னை, அக். 18—கள்ளக் கடத்தல் சம்பந்தமாக தமிழ் நாட்டில் இதுவரை 48 பேர் கைது செய்யப்பட்டிருக்கிருர்கள்.

அவர்களில் 19 பேர், சென்னையில் பிடிபட்டனர்.

## கருணநிதி உறவு பற்றி காமராஜ்

—2-ம் பக்கம்

சென்னை அண்ணு சாலையில் காயிதே மில்லத் அரசினர் கலைக்கல்லூரியை முதலமைச்சர் கருணநிதி குத்து விளக்கேற்றி துவக்கி வைத்தார். நிகழ்ச்சிக்கு கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் தலைமை வகித்தார்.

## திரைப்பட கதாசிரியர் அரு. ராமநாதன் திடீர் மரணம்

**சென்னை, அக். 18—பிரபல நாவலாசிரியரும், திரைப்படக் கதாசிரியருமான அரு. ராமநாதன் இன்று காலை காலமானர்.**

பிரபல திரைப்படக் கதாசிரியர் அரு. ராமநாதன் கல்லீரல்நோய்காரணமாகமெமோரியல் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருந்தார்.

இன்று காலை 4 30 மணிக்கு அவர் திடீரென்று மரணமடைந்தார்

அரு. ராமநாதன் ''காதல்'' பத்திரிகையின் ஆசிரியர் பிரபல நாவலாசிரியரான அவர் பல புத்தங்களை எழுதியுள்ளார்.

'பிரேமா பிரசுரம்' என்ற புத்தக வெளியீட்டு நிலையம் மூலம் பல நூற்றுக்கணக்கான நூல்களை வெளியிட்டுள்ளார்.

மலிவு விலையில் இலக்கிய நூல்களையும், இளைஞர்களைக் கவரும் துப்பறியும் நாவல்களையும் வெளியிட்டுள்ளார்.

அரு. ராமநாதன் எழுதிய ''ராஜராஜ சோழன்'' நாடகம் புகழ்பெற்றது. டி. கே. எஸ். சகோதரர்களால் நடிக்கப்பட்டது அந்த நாடகம். பின்னர் 'ராஜராஜ சோழன்' திரைப்படமாகவும் சினிமாஸ்கோப்பில் தயாரிக்கப்பட்டது.

அவர் தங்கப்பதுமை, கல்யாணிக்குக் கல்யாணம், ஆகிய படங்களுக்கு கதை வசனம் எழுதியுள்ளார்.

அரு. ராமநாதனுக்கு வயது 51. ஒரு மனைவியும் 3 மகன்களும், ஒரு மகளும் இருக்கின்றனர்.

### இறுதி ஊர்வலம்

சென்னை, திருவொற்றியூர் நகரத்தார் விடுதியிலிருந்து இறுதி ஊர்வலம் இன்று மாலை $4\frac{1}{2}$ மணிக்கு புறப்படுகிறது.



## சேலத்தில் விழாக் கோலம்

# சினிமா நட்சத்திரங்கள் படையெடுப்பு: சிவாஜிக்கு பிரமாண்ட வரவேற்பு

**சென்னை, அக். 18—சிவாஜியின் பிறந்த நாள் விழா சேலத்தில் நாளையும், நாளை மறுதினமும் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது.**

இதையொட்டிசேலத்திற்கு இன்று சினிமா நட்சத்திரங்கள் படையெடுத்துள்ளனர்.

விழாவில் கலந்துகொள்ள இன்று இரவு ப்ளூமவுண்டன் எக்ஸ்பிரஸ் ரெயில் மூலம் சிவாஜி கணேசன் சேலம் புறப்படுகிருர்.

நாளை காலை அவர் சேலம் வந்து சேருகிருர். அங்கு அவருக்குச் சிறப்பான வரவேற்பு கொடுக்க பிரமாண்ட ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

சேலம் நகரமே விழாக் கோலம் பூண்டுள்ளது.

சிறப்புமிக்க இந்த விழாவில் கலந்து கொள்ள தமிழக சினிமா நட்சத்திரங்கள் அனைவரும் இன்று இரவு சேலம் புறப்பட்டுச் செல்கிருர்கள்.

இந்தி நடிகர் சஞ்சீவ் குமார், தமிழக நடிகர்களான முத்துராமன், மேஜர் சுந்தர்ராஜன், வி. கே. ராமசாமி, கே. ஏ. தங்கவேலு, எம். ஆர். ஆர். வாசு, மனேகர், பாலாஜி, ஸ்ரீகாந்த், சுருளிராஜன், பிரேம்ஆனந்த், எஸ். ராமராவ், விஜயகுமார் நடிகைகள் கே. ஆர். விஜயா, மஞ்சுளா. விஜயகுமாரி, மனேரமா, ஏ. சகுந்தலா, ஜெயா, பிரமிளா, ஜெயசுதா, எல். கே. விஜயராணி, லீலாராணி விஜயலலிதா, ஜெய்குமாரி, எம். பானுமதி. ஒளிப்பதிவாளர் பி.என். சுந்தரம், திரைப்பட இயக்குநர்கள், ஏ. சி. திருலோக்சந்தர். பி. மாதவன், வி. சீனிவாசன், கதாசிரியர்கள், பாலமுருகன், குகநாதன், மகேந்திரன் மற்றும் பலர் கலந்து கொள்கிருர்கள்.

மெல்லிசை மன்னர் விஸ்வநாதன் குழுவினரின் இன்னிசைக் கச்சேரியும், வாணி ஜெயராமின் மெல்லிசையும், குலதெய்வம் ராஜகோபாலின் கலா நிகழ்ச்சியும் இந்த விழாவில் இடம் பெறுகிறது.

நாளை காலை பிரமாண்டமான ஊர்வலமும் நடைபெற இருக்கிறது.

தமிழக அரசு கொடுக்கிறது

# கரும்புக்கு கூடுதல் விலை: மத்திய அரசைவிட 25 சதவிகிதம் அதிகம்

சென்னை, அக். 18—ஆலைகளுக்கு விவசாயிகள் வழங்கும் கரும்பு விலையை, மத்திய அரசு நிர்ணயித்துள்ளதைக் காட்டிலும் $\frac{1}{4}$ பங்கு (25 சதவிகிதம்) அதிகமாகக் கொடுக்க தமிழக அரசு உத்தரவிட்டுள்ளது.

சமீபத்தில் கரும்பு விவசாயிகள், ஆலை நிர்வாகிகள், அமைச்சர்களுடன் பேச்சு வார்த்தை நடத்தியதைத் தொடர்ந்து இந்த விலை உயர்வுக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

இந்த உத்தரவின்படி, அறிவிக்கப்பட்டுள்ள கரும்பு ... ரகங்களும், டன் ஒன்றுக்கு உள்ள விலை நிர்ணயமும் பின்வருமாறு:—

| | |
|---|---|
| நெல்லிக்குப்பம் பாரி | ரூ. 101-12 |
| ...ரி | ரூ. 100-00 |
| ...கான் | ரூ. 100-00 |
| ...இந்தியா | ரூ. 104-75 |
| ...ற | ரூ. 102-37 |
| ச... | ரூ. 110-62 |
| மதுர... | ரூ. 101-12 |
| கோத்தாரி | ரூ. 106-00 |
| திரு. ஆரூரான் | ரூ. 100-00 |
| நியூஹொரைசன் | ரூ. 100-00 |

## மோதிரம் தொலைந்ததால் தி.மு.க. தொண்டர் தற்கொலை

சென்னை, அக். 18—மோதிரத்தை தவறவிட்டதால் மனமுடைந்து தி.மு.க. தொண்டர் ஒருவர் மூட்டைப்பூச்சி மருந்தை குடித்து தற்கொலை செய்துகொண்டார்.

இதுபற்றி கூறப்படுவதாவது:—

திண்டுக்கல் கோவிந்தாபுரத்தில் உள்ள சுடலைமுத்து மகன் எஸ். சண்முகசுந்தரம் (வயது 22) இவர் 2-வது வட்டத்தில் உள்ள கோவிந்தசாமி நினைவு மன்றத்தின் துணைச்செயலாளராகவும் தி.மு.க. உறுப்பினராகவும் இருந்துவந்தார். இவர் பல ஆண்டுகளாக வேலை இல்லாமலிருந்து திண்டுக்கல் பி.ஆர்.சி.யில் கடந்த $1\frac{1}{2}$ ஒன்றரை ஆண்டுக்கு முன் கண்டக்டர் வேலையில் சேர்ந்தார்.

...பத்தில் சென்னையில் ந... பெற்ற முப்பெரும்விழா ஊர்வலத்தில் சண்முகசுந்தரம் கலந்து கொண்டார்.

பி. ஆர். சி. கண்டக்டராக தற்காலிகமாகவே வேலை பார்த்து வந்தார். முப்பெரும் விழா ஊர்வலத்தில் கலந்து கொள்வதற்கு முதல் நாள் தான் இவர் நிரந்தர கண்டக்டராக வேலை பார்க்க உத்திரவு வந்தது.

சம்பவத்தன்றைக்கு முதல் நாள் தான் போட்டிருந்த $1\frac{1}{2}$ பவுன் தங்க மோதிரத்தை தவறவிட்டு விட்டாராம். இதனால் தனது பெற்றோர்களுக்கு பயந்துகொண்டு மனம் உடைந்து தனது நெருங்கிய நண்பர்களுக்கு தர வேண்டிய கடன் பாக்கியை மட்டும் கொடுத்துவிடும்படி கடிதம் எழுதிவைத்துவிட்டு மூட்டைபூச்சி மருந்து சாப்பிட்டுவிட்டாராம். இதைக் கண்ட பெற்றோர்கள் உடன் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போய் சேர்த்தனர்.

டாக்டர்கள் தீவிர முயற்சி செய்தும் பயன் இல்லாமல் அவர் இறந்துபோனார்.

இவா இறந்த செய்தி கேட்டு 2-வது வட்டத்தில் உள்ள திமுக கொடிகள் அரை கம்பத்தில் பறக்கவிடப்பட்டன.

டாக்டர் பரிசோதனைக்குப் பின் பிரேதம் வீட்டுக்குக் கொண்டுவரப்பட்டு உடல் மீது தி. மு. க. கழகக் கொடி போர்த்தப்பட்டது. மதுரை மாவட்ட தி. மு. க. அவைத்தலைவர் க. வே. விக்ரமாதித்தராசன் 2-வது வட்டச் செயலாளர் பிச்சை பிரதிநிதி அழகு மற்றும் கோவிந்தசாமி நினைவு மன்ற உறுப்பினர்களும் தி. மு. க. உறுப்பினர்களும் மாலைகள் அணிவித்து இறுதி மரியாதை செலுத்தினார்கள். 2வட்ட மக்கள் அனைவரும் துக்கத்தை அனுசரிக்கும் பொருட்டு கருப்பு சின்னம் அணிந்திருந்தார்கள்.

## நீர் மட்டம்

சென்னை, அக. 9—

| | | |
|---|---|---|
| மேட்டூர் | 68·80 | அடி |
| | மீட்டர் | |
| பெரியாறு | 6·01 | ,, |
| வைகை | 10·24 | ,, |
| பாபநாசம் | 20·38 | ,, |
| கிருஷ்ணகிரி | 10·25 | ,, |
| சாத்தனூர் | 14·04 | ,, |
| மணிமுத்தாறு | 15·51 | ,, |
| பேச்சிபாறை | 2·21 | ,, |
| பெருஞ்சானி | 10·32 | ,, |

## முத்துராஜா மகாஜன சங்கம்

சென்னை, அக். 18— தமிழ்நாடு முத்துராஜா மகாஜன சங்கத்தின் கிளை நுங்கம்பாக்கத்தில் திறக்கப்பட்டது.

கன்னைய நாயுடு தலைமை வகித்தார்.

எஸ். கே. வடிவேல் எம். எல்.ஏ. சங்கத்தை திறந்து வைத்தார்.

சங்கத்துக்கு சுப்பராயலு நாயுடு தலைவராகவும், மணவாளன் செயலாளராகவும் வேணுகோபால் நாயுடு பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## சென்னையில் நாளைய நிகழ்ச்சிகள்

தீர்த்தபாலீஸ்வரர் தேவஸ்தானம் நவராத்திரி விழா: ஞானநந்த நாம சங்கீர்த்தன மாதர்கள் மண்டலிபஜனை, 141, டாக்டர் நடேசன் சாலை, கிருஷ்ணம்பேட்டை, மாலை 7 மணி.

கற்பகாம்பாள் நாக ஊர்தியில் பத்மாசினி அலங்காரம்: அலைமகளும், கலைமகளும் என்பது பற்றி திருமதி சாயிமாதா சிவ பிருந்தாதேவி சொற்பொழிவு மாலை 6 மணி, எ. வி. பாரதி குழுவினர் வீணை, இசை இரவு 7-30 மணி, கே. எல். ரகுமாயி குழுவினர் பக்திப் பாடல்கள் இரவு 9 மணி. கபாலீஸ்வரர் ஆலயம், மயிலை

# கருணாநிதியுடன் என்ன உறவு? காமராஜ் விளக்கம்

சென்னை, அக். 18—ஏதாவது திருமணத்தில்தான் நான் கருணாநிதியைச் சந்திக்கிறேன். ஆனால், நான் அவருடன் ரகசிய உறவு வைத்துக் கொண்டிருப்பதாகவும், தனியாகச் சந்தித்துப் பேசியதாகவும் பத்திரிகைகளில் புளுகுகிறார்கள் என்று காமராஜ் கூறினார்.

இதேபோல் அ. தி. மு. க. தலைவர் எம். ஜி. ஆரும் என்னுடன் அமர்ந்து படம் பிடித்துக்கொள்கிறார். இவர்கள் சந்திப்பதாலேயே நான் அவர்கள் கட்சிக்கு போய்விடுவேன் என்று அர்த்தமா என்றும் அவர் கேட்டார்.

சென்னை 70-வது வட்டத்தில் காந்திஜி சிலையை நேற்று காமராஜ் திறந்து வைத்தார். அவர் பேசும்போது கூறியதாவது:—

பதவி இருந்தால் பணம் வரும், பணம் இருந்தால் பதவியைப் பிடிக்கலாம் என்ற மனப்பான்மை இன்று நாட்டில் வளருகிறது. இதை உடைத்தெறிய வேண்டும். இப்படிப்பட்ட எண்ணம் வளர்ந்தால் சோஷலிசம் எப்படி வரும்?

தமிழ்நாட்டில் புதிய கட்சி தோன்றியுள்ளது. அந்தக் கட்சியினரும் அடுத்த ஆட்சி எங்களுடையது என்கிறார்கள். அடுத்து நாங்கள்தான் ஆளப் போகிறோம் என்கிறார்கள். இவர்கள் மக்களை என்னவென்று நினைக்கிறார்கள்? அப்பாவிகள் ஏமாந்துவிடுவார்கள் என்று நினைக்கிறார்கள்.

இவர்கள் ஆட்சிக்கு வந்தால் விலைவாசி குறையுமா?

இவர்கள் தி.மு.க.வில் ஒன்றாக இருந்து ஏமாற்றினார்கள். ரூபாய்க்கு 3 படி அரிசி போடுவோம் என்று அப்பாவி மக்களை ஏமாற்றி ஓட்டு வாங்கினார்கள். இப்போது வெளியே வந்ததும் மற்றவர்களோடு சேர்ந்துகொண்டு சத்தம் போடுகிறார்கள்.

### இருவருக்கும் கோபம்

தி.மு.க வினர் முப்பெரும் விழா என்ற பேரால் ஊரெல்லாம் விழா நடத்தி அமர்க்களப்படுத்தினார்கள்.

புதிய கட்சியினர் அண்ணா விழா கொண்டாடுகிறார்கள். இருவருக்கும் விழா நடத்துவதில் போட்டா போட்டி.

இருவருமே என்னையும், காங்கிரசையும் திட்டுகிறார்கள். என்மேல் இருவருக்குமே கோபம்.

இந்த ஒரு ஆள் இல்லையானால் ஊரை நன்றாக ஏமாற்றலாமே என்று எண்ணுகிறார்கள்.

### புளுகு

நான் அவரோடு சேர்ந்து விட்டேன். ரகசியமாகப் பேசினேன். சந்தித்தேன் என்றெல்லாம் புளுகுகிறார்கள். புளுகுவதற்கு அளவே இல்லாமல் புளுகுகிறார்கள், பத்திரிகைகளில் என்னைப் பற்றி எழுதுகிறார்கள்.

திருமண வீடுகளுக்குப் போகிறோம். முதலமைச்சர் வருகிறார். பக்கத்தில் உட்காருகிறார். அதே போல புதிய கட்சி தலைவரும் வருகிறார்; என் பக்கத்தில் உட்காருகிறார். புகைப் படம் எடுக்கிறார்கள். பத்திரிகைகளிலும் போட்டுக் கொள்கிறார்கள். கல்யாண வீடுகளில் சந்தித்துப் பேசுவதால் அவர்கள் சொற்படி கேட்பதாக அர்த்தமா? நான் அவர்கள் கட்சிக்கு போய்விடுவேனா? அவர்கள்தான் என் சொல்படி கேட்பதாக கூற முடியுமா? நான்தான் இருவருமே ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள் என்று கூறுகிறேன்.

### பதவியை விட்டதன் விளைவு

முதலமைச்சர் பதவியை நானேதான் விட்டுவிட்டுப் போனேன். நான் போனதினால் வந்த விளைவுதான் இவர்கள் ஆட்சிக்கு வந்தது. இப்போதும் பயப்படுகிறார்கள். என்னைப்பற்றி பத்திரிகைகளில் எழுதுகிறார்கள். நான் இவர்களுக்கு பதில் சொல்வதில்லை. இவர்கள் எழுதுவதை மக்கள் நம்பமாட்டார்கள் என்பது எனக்குத் தெரியும்.

மக்களுக்கு உண்மை தெரியும். நான் அவர்கள் எழுதுவது பற்றி கவலைப்படவில்லை.

மேற்கண்டவாறு காமராஜ் பேசினார்.

## முஸ்லிம் மக்களுக்கு கருணாநிதி வாழ்த்து

சென்னை, அக். 18—முஸ்லிம்களின்முக்கிய பண்டிகையான ரம்ஜான் திருநாள் இன்று கொண்டாடப்படுகிறது அல்லவா?

இதை யொட்டி முஸ்லீம் மக்களுக்கு தமிழக முதல்வர் கருணாநிதி தமது வாழ்த்துக்களைத் தெரிவித்துள்ளார்.

அந்த வாழ்த்துச்செய்தியில் அவர் கூறியிருப்பதாவது:—

''அன்பும் அறமும் பெருகிட அமைதி தவழ்ந்திட இந்த ஈத் பெருநாளில் (ரம்ஜான்) என் இதய வாழ்த்துக்களை இஸ்லாமியப் பெருமக்கள் அனைவருக்கும் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேற்கண்டவாறு முதல்வர் கருணாநிதி தமது வாழ்த்துச் செய்தியில் குறிப்பிட்டிருக்கிறார்.

முஸ்லிம்களின் புனித பண்டிகை

# ரம்ஜான்

(அதிராம்பட்டினம் ஜபார்)

முஸ்லிம்களின் புனிதமான பண்டிகை ரம்ஜான். உலகெங்கிலுமுள்ள முஸ்லிம்கள் ரம்ஜானை இன்று மகிழ்ச்சியுடன் கொண்டாடுகிறார்கள்.

உலகம் முழுவதும் உள்ள கோடிக்கணக்கான முஸலிம்கள் அனைவரும் ஆண்டுக்கு இரண்டு பெருநாள் பண்டிகையைக் கொண்டாடி வருகின்றனர்! அதில் ஒன்று ரம்ஜான் பண்டிகை. மற்றொன்று பக்ரித் பண்டிகை இதில் இந்த ஆண்டு இன்று (அக்டோபர் 18-ந்தேதி) உலகெங்கும் ரம்ஜான் பண்டிகை கொண்டாடப்படுகிறது.

உலகம் முழுவதும் உள்ள முஸ்லிம்கள் அனைவரும் வெவ்வேறு மொழிகளை, தாய் மொழிகளாக கொண்டவர்களானாலும், அரபு மொழியில் ஆன ''குர்-ஆன்'' என்ற வேதத்தை ஓதி ஆக வேண்டும் என்பது கடமை ஆக்கப்பட்டிருக்கிறது. முஸ்லிம்கள் அனைவருக்கும் 5 கடமைகளை இறைவன் வகுத்து அளித்துள்ளான அவைகளாவன:—

### 5 கடமைகள்

1. ''கலிமா'' என்னும் வேதத்தை ஓத வேண்டும்.
2. நாள் ஒன்றுக்கு ஐந்து நேரம் இறைவனைத் தொழ வேண்டும்.
3. ஆண்டு ஒன்றுக்கு 30 நாள் உண்ணா நோன்பு இருக்க வேண்டும்.
4. தனக்குள்ள வருமானத்திலிருந்து ஒருகுறிப்பிட்ட தொகையை ''ஜக்காத்'' என்னும் பெயரில் ஏழைகளுக்கு வழங்க வேண்டும். இறப்பதற்குள் ஒரு முறை மக்கா நகர் சென்று இறைவனை தொழ வேண்டும்.

இந்த ஐந்து கடமைகளில் மூன்றாவதாக வரும் 30 நாள் நோன்பு என்பது, அதிகாலை 4 மணிக்கு உணவை முடித்துக்கொண்டு மாலை 6 மணிக்குத் தான் மறு உணவை உட்கொள்ள வேண்டும் இடையில் உள்ள நேரங்களில் உணவோ தண்ணீரோ உட்கொள்ளக் கூடாது. இதற்கு இடையே உள்ள நேரங்களில் இறைவனின் திருத்தூதர்களின் சரித்திரங்களை சொல்லக் கேட்டு நினைவு படுத்திக் கொண்டும் விசேஷப் பிரார்த்தனை செய்வதிலேயே கவனம் வைப்பார்கள்.

30 நாள் நோன்பு (விரதம்) முடிந்ததும் பண்டிகை ஆரம்பம் ஆகும். சிறியோர் முதல், பெரியோர் வரை புத்தாடை அணிவார்கள். பலவிதமான உணவுகளைத் தயார் செய்து நண்பர்களுக்கும் வேண்டியவர்களுக்கும் விருந்தளிப்பார்கள். ஏழை—எளியவர்களுக்கும் உணவு கொடுத்து மன மகிழ்ச்சி அடைவார்கள். விருந்து முடிந்ததும், இறைவன் ஆலயம் சென்று (பள்ளிவாசல்)பெருநாள் தொழுகை தொழுது மகிழ்வார்கள். ரம்ஜான் பண்டிகை கொண்டாடும் அன்பர்கள் அனைவருக்கும் இதயங்கனிந்தபெருநாள் வாழ்த்துக்கள் உரித்தாகுக!

# இந்திரா மந்திரி சபை: மேலும் 2 புதிய மந்திரிகள் நியமனம்

புதுடெல்லி, அக். 18—பிரதமர் இந்திரா காந்தியின் மந்திரி சபையில் புதிதாக 2 பேர் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கிறார்கள்.

எச். எம். திரிவேதி, ராஜாங்க அமைச்சராகவும், பிரபுதாஸ் படேல் உதவி மந்திரியாகவும் நியமிக்கப்பட்டனர்.

அவர்கள் இருவரும் குஜராத் மாநிலத்தைச் சேர்ந்தவர்கள்.

ராஜ்யசபை உறுப்பினரான திரிவேதி நேற்று மாலை பதவி ஏற்றார். மந்திரி கமலபதி திரிபாதி நிர்வகித்துவருகிற போக்குவரத்து இலாகாவில் ராஜாங்க அமைச்சராக திரிவேதி பணியாற்றுவார்.

மக்கள்சபைஉறுப்பினரான பிரபுதாஸ் படேல் வெளியூருக்குச் சென்றிருப்பதால் அவர் நேற்று பதவி ஏற்க இயலவில்லை.

சமீபத்தில் மத்திய மந்திரி சபை மாற்றி அமைக்கப்பட்டபோது. உதவி மந்திரிகளாக நியமிக்கப்பட்ட பிபின் பால்தாஸ் (அஸ்ஸாம்), சி.பி. மாரி (ஒரிசா) ஆகியோர் நேற்று பதவி ஏற்றனர்.

எச். எம். திரிவேதி, நீண்டகாலமாக கப்பல் போக்குவரத்து துறையில் அனுபவம் பெற்றவர்.

பிரபுதாஸ் படேல், முன்பு சுதந்திரா கட்சியில் இருந்தவர். குஜராத் மாநிலத்தில் பல்வேறு கல்வி, கூட்டுறவு நிறுவனங்களில் பணியாற்றியவர். விவசாய. நீர்ப்பாசன இலாகா உதவி மந்திரியாக அவர் பொறுப்பு ஏற்பார்.

மத்திய மந்திரி சபையில் உள்ள மந்திரிகள், ராஜாங்க மந்திரிகள், உதவி மந்திரிகள் ஆகியோரின் மொத்த எண்ணிக்கை தற்போது 62 ஆக உயர்ந்துள்ளது.

## நியூயார்க் பருத்தி மார்க்கெட்

நியூயார்க், அக். 18—

| | |
|---|---|
| ஆரம்ப விலை | 45·85 |
| முடிவு விலை | 45·86 |

# ஓட்டலில் அழகி பிணம்: கழுத்தை நெரித்து கொல்லப்பட்டாள்

சென்னை, அக். 18—சென்னை மாம்பலத்தில் உள்ள குட்லக் லாட்ஜில் பூட்டிய அறையில் ஒரு இளம் அழகி பிணமாகக் கிடந்தாள் அல்லவா?

இந்தச் சம்பவம் கடந்த மாதம் 26-ந்தேதி நடந்தது. அந்தப் பெண் எப்படிச் செத்தாள் என்பது மர்மமாக இருந்தது. அந்தப் பெண்ணுடன் திருப்பதியிலிருந்து ஒருவர் வந்து தங்கியிருந்ததாகவும் கூறப்பட்டது.

பூட்டிய அறையிலிருந்து துர்நாற்றம் வந்ததைதொடர்ந்து அந்த அறைக் கதவை உடைத்து போலீசார் அந்தப் பிணத்தைக் கைப்பற்றி விசாரணைக்காக அனுப்பி வைத்திருந்தனர். பிரேதப் பரிசோதனையிலிருந்து அந்தப் பெண் கழுத்தை நெரித்துக் கொலை செய்யப்பட்டிருக்கலாம் என்று தெரியவந்திருக்கிறது.

மேற்கண்ட தகவலை போலீஸ் கமிஷனர் ஷெனாய் தெரிவித்தார்.

## விழியிழந்த மாணவர் கோரிக்கை

சென்னை, அக். 18—பூவிருந்தவல்லி அரசினர் அந்தகர் பள்ளி மாணவர்கள் தங்களுக்கு உணவு, உடை, உறைவிடம் ஆகிய வசதிகளை மேம்படுத்த வேண்டும் என்று கோரி முறையிட்டுள்ளனர். பள்ளிமுதல்வர் மாணவர்களை சரியாக நடத்துவதில்லை என்றும் அவர்கள் புகார் கூறியுள்ளனர்.

## நகரசபை ஊழியர் ஸ்டிரைக்கை கைவிட கோரிக்கை

சென்னை, அக். 18 ஆலந்தூர் நகரசபை ஊழியர்களின் வேலை நிறுத்தம் தேவையற்றது என்று நகரசபைத் தலைவர் ஆலந்தூர் பாலன் தெரிவித்துள்ளார்.

நகராட்சியின் நிதி நிலைமை தொழிலாளர்களின் கோரிக்கையை ஏற்க முடியாதபடி இருப்பதாகவும், ஆகையால் பொதுமக்களின் நலனை கருதி வேலை நிறுத்தத்தைக் கைவிட்டு பணிக்குத் திரும்புமாறு அவர் தொழிலாளர்களைக் கேட்டுக்கொண்டிருக்கிறார்.

## சத்தியா ஸ்டுடியோ ஊழியர்கள் பிச்சை எடுக்கும் காட்சி

சென்னையில் தி. மு. க. நடத்திய முப்பெரும் விழா ஊர்வலத்தில், திருச்சி ராமசாமி கோஷ்டியினர் சார்பில் ஒரு அலங்கார ரதம் வந்தது அதில், அ. தி. மு. க. தலைவர் எம்.ஜி.ஆர். சினிமா நடிகைகளுடன் உல்லாசமாக இருப்பது போலவும் அதே நேரத்தில் எம். ஜி. ஆருக்குச் சொந்தமான சத்தியா ஸ்டுடியோ ஊழியர்கள் கையில் சட்டி ஏந்தி பிச்சை எடுப்பதைப் போலவும் சித்தரிக்கப்பட்டிருந்தது.

எம்ஜிஆர் வேடத்தில் இருப்பவர், திருச்சி ராமசாமி.

## தென்னை நார் உற்பத்தி கூட்டுறவு சங்கம்

சென்னை, அக். 18—சென்னை சிந்தாதிரிப்பேட்டை தென்னை நார் உற்பத்தி கூட்டுறவு சங்கத்தில் செயலாளராக பணியாற்றி வந்த நடராஜனுக்கு வழியனுப்பு விழாவும், புதிய செயலாளர் சண்முகவேலுவுக்கு வரவேற்பு விழாவும நடைபெற்றது.

விழாவுக்கு சங்கத் தலைவர் பா. சாட்டு தலைமை வகித்தார்.

## நாங்குநேரியை ரிசர்வ் தொகுதியாக மாற்ற கோரிக்கை

திருநெல்வேலி, அக். 18—திருச்செந்தூர் பார்லிமெண்ட் தொகுதி, நாங்குநேரி சட்டசபை தொகுதிகளை ஷெட்யூல்ட் வகுப்பு ரிசர்வ் தொகுதியாக மாற்ற வேண்டுமென்று நெல்லை மாவட்ட தாழ்த்தப்பட்டோர் லீக் தலைவர் பி. பெரியசாமி கேட்டுக் கொண்டிருக்கிறார்.



சென்னையில் அரசு ஊழியர்கள் கோட்டை நோக்கி ஊர்வலம் சென்றார்கள் அல்லவா? அந்த ஊர்வலத்தில் கலந்துகொண்ட பெண் ஊழியர்கள்.

# முதலமைச்சர் கபூருக்கு கல்தா: ஜெயப்பிரகாஷ் போராட்ட எதிரொலி

**புதுடெல்லி, அக். 18—பீகார் முதலமைச்சர் பதவியிலிருந்து அப்துல்கபூரை விலகும்படி செய்துவிட்டு, அவருக்கு பதிலாக வேறொருவரை அந்த பதவிக்கு நியமிக்க காங்கிரஸ் மேலிடம் முடிவுசெய்துவிட்டதாகத் தெரிகிறது.**

ஜெயப்பிரகாஷ் நாராயண் நடத்திவருகிற போராட்டத்தை முன்னிட்டும், பீகார் சட்டசபை காங்கிரஸ் கட்சியில் கபூருக்கு ஏற்பட்டுள்ள எதிர்ப்பை முன்னிட்டும் காங்கிரஸ் மேலிடம் மேற்கண்ட தீர்மானத்தை எடுத்திருப்பதாகத் தெரிகிறது.

காங்கிரஸ் கட்சியின் புதிய தலைவராக டி. கே. பருவா இன்னும் ஓரிரு தினங்களில் பதவிப் பொறுப்பு ஏற்பார். இந்த மாதம் 28-ந் தேதியன்று அவர் பாட்னா நகருக்குப் போய், பீகார் காங்கிரஸ் எம். எல். ஏ க்களைச் சந்தித்து, புது முதலமைச்சராக யாரை ஆக்குவது என்பது பற்றி முக்கிய ஆலோசனை நடத்துவார்.

முதலமைச்சர் பதவியிலிருந்து கபூரை விலக்கவேண்டும் என்று கம்யூனிஸ்டு கட்சியும் கோரி வருகிறது.

கபூர் விலகிய பிறகு முதலமைச்சர் பதவிக்கு ஹரிநாத் மிஸ்ரா, திருமதி ராம் துலாரி சின்ஹா ஆகியோர்களின் பெயர்கள் அடிபடுகின்றன. ஹரிநாத்மிஸ்ராவுக்கு அதிக வாய்ப்புகள் இருப்பதாக கருதப்படுகிறது.

பீகார் பிரதேச காங்கிரஸ தலைவர் சீதாராம கேசரி, நேற்று டெல்லியில் பிரதமர் இந்திரா காந்தியைச் சந்தித்துப் பேசினார்.

இந்த மாதம் 28-ந் தேதியன்று பருவா, பாட்னா நகருக்குப்போய்ச் சேர்ந்தவுடன் பீகார் மாநில மந்திரி சபை, பிரதேச காங்கிரஸ் காரியக் கமிட்டி ஆகியவைகளின் கூட்டுக் கூட்டம் நடைபெறும்.

7-ம் பத்தி தொடர்ச்சி

அமைத்ததாகக் கூறியிருப்பது அப்பட்டமான பொய் என்றும் கூறினார்.

சந்திரலேகா படம் வெளியான நேரத்தில், இதே ஷியாம் சுந்தர் தன் தந்தையிடம் வந்து 'சான்ஸ்' கேட்டு அலைந்தார் என்றும் கோபால் குறிப்பிட்டார்.

## கணேஷ் நிதி உதவி

மன்றத் தலைவர் பரமசிவம் பேசும்போது கூறியதாவது:-

ஸ்டண்ட் சோமுவின் நினைவு நாள் விழாவைக் கொண்டாடுவதே மிகச் சிரமமாகிவிட்டது.

இதற்காகயார் யாரையோ நாடினேன். யாரும் உதவ முன் வரவில்லை. சி. டி. ராஜகோபாலும், கணேஷும் (சங்கர்) கடைசியாக உதவினார்கள்.

அடுத்த ஆண்டு சோமுவின் நினைவு நாளைக் கொண்டாட முடியுமா என்பது சந்தேகமே என்று கூறினார்.

அடுத்துப் பேசிய மதிஒளி ஷண்முகம் இதுபற்றிக் குறிப்பிடுகையில், இசையமைப்பாளர் கணேஷ் இதற்கு உதவ வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

கணேஷ் பேசும்போது மதிஒளி சண்முகத்தின் கோரிக்கையை ஏற்றுக் கொண்டார்.

இதற்காக தான் ஒரு இசை நிகழ்ச்சி நடத்தித் தருவதாக கணேஷ் கூறினார்.

## இன்றைய சினிமா

**சென்னை**

ராம் — அக்கரை பச்சை
நியூ எல்பின்ஸ்டன் — அடுத்த வீட்டு அழகி
நேஷனல் கலாட்டா கல்யாணம்
ஈராஸ் — சாந்தி

**தாம்பரம்**

நேஷனல்- — தங்கப்பதக்கம்
எம். ஆர். தியேட்டர் — வாணி ராணி
ஸ்ரீசித்ரா சம்பூர்ணராமாயணம்

**வில்லிவாக்கம்**

ராயல் — ராஜநாகம்

**குரோம்பேட்டை**

வெற்றி — எங்கம்மாசபதம்

## அவிநாசிலிங்கம் செட்டியாருக்கு பாராட்டு விழா

சென்னை, அக். 18—கிராமப்புற கல்விப்பணி, கிராம வளர்ச்சிப் பணி ஆகியவைகளுக்காக "நேரு எழுத்தறிவு விருது" பெற்றுள்ள முன்னாள் மந்திரி டி. எஸ். அவிநாசிலிங்கம் செட்டியாரைப் பாராட்ட சென்னை தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் இம் மாதம் 20-ந் தேதி மாலை 6-மணிக்கு ஒரு கூட்டம் நடைபெறும்.

அப்போது அவிநாசிலிங்கம் செட்டியாருக்கு பழைய காங்கிரஸ் தலைவர் காமராஜர் பொன்னாடை போர்த்தி பாராட்டு வழங்குவார். மேலவை துணைத் தலைவர் ம. பொ. சிவஞானம் தலைமை தாங்குவார்.

முன்னாள் மத்திய அமைச்சர் அளகேசன், தமிழ்நாட்டின் முன்னாள் அமைச்சர் பூவராகன், மற்றும் ஏ. ஜி. வெங்கடாச்சாரி, கி. வ. ஜகன்னாதன் எஸ். டி. சுந்தரம், நா. பார்த்தசாரதி, ஏ. பி. நாகராஜன் முதலானோர் பேசுவார்கள்.

குசேலர் குற்றச்சாட்டு

## தொழிலாளியை போலீசார் அடித்து உதைத்தார்களாம்

சென்னை, அக், 18—போரூரில் உள்ள ஒரு தொழிற்சாலையைச் சேர்ந்த தொழிலாளியை கைது செய்துகொண்டு போய் போலீஸ் ஸ்டேஷனில் வைத்து அடித்தார்களாம்.

இதுகுறித்து தமிழ்நாடு தொழிற்சங்க மாமன்றத் தலைவர் ஆர். குசேலர் பின்வரும் அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்.

"போரூரிலுள்ள டபிள்யூ. எஸ். இன்சுலேட்டர்ஸ் நிறுவனத்தின் தொழிற்சங்கத்தில் நிர்வாகத்தினரின் தலையீட்டைக் கண்டித்து, தொழிலாளர்கள் கடந்த 8 நாட்களாக வேலைநிறுத்தப் போராட்டம் நடத்திவருகிறார்கள். கிராமங்களுக்குப் போய் தொழிலாளர்களை மிரட்டுவதில் போலீசார் ஈடுபட்டிருக்கிறார்கள்.

நேற்று ஒரு கூட்டத்தில் பேசிவிட்டு திரும்பி வந்துகொண்டிருந்த சங்கத்தின் பொதுச் செயலாளர் சுப்பிரமணியையும், மற்றும் சிலரையும் போலீசார் வளைத்து கைது செய்து போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துப்போய் அடித்து, மிரட்டினார்கள்.

எத்திராஜ் என்ற தொழிலாளியை போலீசார் விருகம்பாக்கம் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துப்போய் அவருடைய ஆடைகளை அவிழ்த்து அடித்தனர்.

போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்து சென்னை—செங்கற்பட்டு தொழிற்சங்க மாமன்றமானது, அண்ணா தி. மு. கழகம், பழைய காங்கிரஸ், புது காங்கிரஸ், சி. ஐ. டி. யூ, ஏ. ஐ. டி. யூ. சி. போன்ற முற்போக்கு சக்திகளுடன் சேர்ந்து போராட நேரிடும் என்று எச்சரிக்க விரும்புகிறேன் என்றார் குசேலர்.

# கோவைச் செழியன் புகார்: அமைச்சர் ஆதித்தனர் விளக்கம்

**சென்னை, அக். 18—அ. தி. மு. க. தலைவர் கோவைச் செழியன் கூறிய புகாருக்கு அமைச்சர் ஆதித்தனர் பதில் அளித்தார்.**

கோவை பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சியின் பலனாக கண்டுபிடிக்கப்பட்ட ஒரு பருத்தி விதையின் ரகசியம் தனியாருக்கு விற்கப்பட்டதாக அ. தி. மு. க. பிரமுகர் கோவை செழியன் கூறியிருந்தார் அல்லவா? இந்தப் புகார் பற்றி அமைச்சர் ஆதித்தனரிடம் கேட்கப்பட்டது.

இதற்கு அவர் பதிலளிக்கையில், "இது சம்பந்தமாக தகவல் சேகரிக்க சொல்லியிருக்கிறேன். பெங்களூரில் "வரலட்சுமி" என்னும் விதை கண்டுபிடிக்கப்பட்டது. அவர் அதைத்தான் குறிப்பிடுகிறாரா என்று தெரியவில்லை" என்றார்.

மேலும் அவர் நிருபர்களிடம் கூறியதாவது:—

## 5 லட்சம் ஏக்கரில் மரவள்ளி கிழங்கு

தமிழ்நாட்டில் ரூ. 5 கோடி செலவில் மேலும் 5 லட்சம் ஏக்கரில் மரவள்ளிக் கிழங்கை சாகுபடி செய்யும் திட்டம் அமுல் படுத்தப்பட்டு வருவதாக விவசாய அமைச்சர் ஆதித்தனர் தெரிவித்தார்.

இத்திட்டத்துக்கு மத்திய அரசு உதவி அளித்து வருகிறது. பூரா செலவையும் உதவியாக அளிக்கும்படி கோரியுள்ளோம் என்றும் அவர் சொன்னார்.

"மரவள்ளிக் கிழங்கைப் பயன்படுத்தி ஜிலேபி, ஓமப்பொடி ஆகியவற்றைத் தயாரிக்கலாம். அவை ருசியாக இருக்கும்" என்றார் அமைச்சர் ஆதித்தனர்.

"நானே அவற்றைச் சாப்பிட்டுப் பார்த்திருக்கிறேன்" என்றும் அவர் தெரிவித்தார்.

மரவள்ளிக்கிழங்கை சமைத்து குழம்புடன்சேர்த்து சாப்பிடலாம். மரவள்ளிக் கிழங்கை சாதம்போல சாப்பிடமுடியும். அதன் விலையும் குறைவு என்று அமைச்சர் குறிப்பிட்டார்.

அரிசிப் பற்றுக்குறையைப் போக்க மரவள்ளிக்கிழங்கு உதவும் என்றார் அவர்.

அவர் மேலும் கூறியதாவது:

தமிழ் நாட்டில் ஏற்கெனவே சேலம் மாவட்டத்தில் 2 லட்சம் ஏக்கரில் மரவள்ளிக் கிழங்கு பயிரிடப்பட்டு வருகிறது. புதிதாக கன்னியாகுமரி, திருநெல்வேலி, ராமநாதபுரம், தென் ஆற்காடு மாவட்டங்களிலும் தஞ்சாவூர், செங்கல்பட்டு மாவட்டங்களில் ஒரு பகுதியிலும் 5 லட்சம் ஏக்கரில் மரவள்ளிக்கிழங்கை பயிராக்கும் திட்டம் கடந்த ஜூன் மாதத்திலிருந்து அமுலாக்கப்பட்டு வருகிறது. இது 18 மாத காலத் திட்டமாகும்.

கேரளாவில் திருவனந்தபுரத்தில் மரவள்ளிக்கிழங்கு ஆராய்ச்சி நிலையம் உள்ளது. அங்கிருந்து விதைப்புக்கான மரவள்ளிக் கிழங்கு துண்டுகளைப் பெற முயற்சித்து வருகிறோம்.

இத் திட்டத்தின் கீழ் மரவள்ளிக்கிழங்கு பயிரிடும் விவசாயிகளுக்கு உரம், கடன் உதவி ஆகியவை அளிக்கப்படுகின்றன.

இவ்வாறு அமைச்சர் ஆதித்தனர் கூறினார்.

கள்ளப் படகில் வந்த

## 12 பாகிஸ்தான் ஆசாமிகள் கைது

ராஜ்கோட் அக். 18—பாகிஸ்தானிலிருந்து கள்ளத்தனமாக இந்தியாவுக்குப் படகில் வந்த 12 பாகிஸ்தான் ஆசாமிகள் குஜராத் மாநிலத்தில் வெராவல் என்னுமிடத்திலிருந்து 10 கிலோ மீட்டரில் உள்ள கடலோரக் கிராமத்தில்கைது செய்யப்பட்டுள்ளனர்.

கிராமவாசிகள் கொடுத்த தகவலின் பேரில் அந்த 12 பேரும் கைது செய்யப்பட்டனர்.

கைதான நபர்கள் மோட்

(5-ம் பத்தி பார்க்க)

7-ம் பத்தி தொடர்ச்சி

டார் படகு ஒன்றில் வந்தனர் அப்படகு அவர்களை இறக்கி விட்டுச் சென்றுவிட்டது.

தாங்கள் வேலை தேடி துபாய்க்குக் கிளம்பியதாக அவர்கள் கூறினர். தங்களை இறக்கிவிட்ட இடம் இந்தியா என்று தங்களுக்குத் தெரியாது என்றும் அவர்கள் கூறினர்.

ஸ்டண்ட் சோமு நினைவு நாள்:

## சங்கர் - கணேஷ் இசை நிகழ்ச்சி

சென்னை, அக். 18—பிரபல சினிமா 'ஸ்டண்ட்' நடிகர் 'ஸ்டண்ட்' சோமுவின் நினைவு நாள் விழாவைக் கொண்டாட, பிரபல இசையமைப்பாளர் கணேஷ் (சங்கர்) இலவசமாக இசை நிகழ்ச்சி நடத்தித் தருவதாகக் கூறினார்.

தமிழ், இந்தி சினிமா படங்களில் சண்டைக் காட்சியைப் புகுத்தியவர் ஸ்டண்ட் சோமு.

இவர் மறைந்து 6 ஆண்டுகள் ஆகின்றன. அவர் உயிரோடிருந்தபோது ஸ்டண்ட் சோமு வீர மன்றம் என்ற பெயரில் ஒரு அமைப்பை ஏற்படுத்தி, கத்திச் சண்டை, குத்துச் சண்டை, போன்ற வீர விளையாட்டுகளை கற்றுக்கொடுத்து வந்தார். இந்த மன்றம் சென்னை தேனாம்பேட்டையில் இருந்து வந்தது.

ஸ்டண் சோமு இறந்ததற்குப் பிறகு அந்த மன்றத்தின் தலைவரான தஞ்சை பரமசிவம் நடத்தி வந்தார்.

### ஸ்டண்ட் சோமு படம்: சி. டி. ஆர். திறந்தார்

ஸடண்ட்சோமுவின் 7-வது ஆண்டு நினைவு விழா சென்னை வாணிமகாலில் நேற்று மாலை நடைபெற்றது. விழாவுக்கு சினிமா பட இசையமைப்பாளர் கணேஷ் (சங்கர்) தலைமை வகித்தார்.

ஸ்டண்ட் சோமுவின் படத்தை இந்திய மக்கள் கட்சி தமிழ்நாட்டுக் கிளையின் பொருளாளர் சி. டி. ராஜகோபால் திறந்துவைத்தார்.

இந்த விழாவில் ஜி. என். வேலு மணியன் மூத்த மாப்பிள்ளை, ஸடாலின் சோமுவின் மகன் கோபால், தம்பி அழகிரி, மதியொளி சண்முகம் ஆகியோர் பேசினார்கள்

இந்த விழாவில், குத்துச் சண்டை, கத்திச் சண்டை, ஜூடோ விளையாட்டு ஆகிய வீர விளையாட்டுக்கள் இடம் பெற்றன.

மன்றத்தலைவர் பரமசிவத்தின் மகன்கள், மகள் ஆகியோர் அதில் பங்கு பெற்றனர்.

குத்துச்சண்டைப் போட்டியில் வெற்றிபெற்றவர்களுக்கு கணேஷ் (சங்கர்) வெள்ளி கேடயம் பரிசு வழங்கினார். ஜூடோ விளையாட்டில் வெற்றி பெற்றவர்களுக்கு மதிஒளி ஷண்முகம் பரிசு வழங்கினர்.

இந்த விழாவில் ஸ்டண்ட் சோமுவின் மகன் கோபால் பேசும்போது, சந்திரலேகா, படத்திற்கு சண்டைக்காட்சி அமைத்தது தன்னுடைய தந்தை சோமுதான் என்றும், ஷியாம் சுந்தர்தான் அந்த படத்திற்கு சண்டைக் காட்சி

1-ம் பத்தி பார்க்க

# பம்பாயில் மற்றொரு கடத்தல் மன்னர் பிடிபட்டார்

**பம்பாய், அக். 18—பெரிய கடத்தல் மன்னர்களில் ஒருவரான மோகன்சேதன்தாஸ் மங்கானி நேற்று காலை பம்பாயில் கைது செய்யப்பட்டார்.**

அவருக்கு வயது 26. துபாய் நாட்டிலிருந்து இந்தியாவுக்கு கள்ளத்தனமாக பொருள்களை கடத்துவதில் அவர் ஈடுபட்டிருந்தாராம்.

அவரிடமிருந்து ஒரு துப்பாக்கியும், 6 லட்சம் ரூபாய் மதிப்புள்ள கடத்தல்பொருள்களும் கைப்பற்றப்பட்டன.

பம்பாயில் கடந்த 2 நாட்களாக 50 இடங்கள் சோதனையிடப்பட்டன. கடத்தல் மன்னர்களான மஸ்தான், யூசுப் படேல் ஆகியோரின் இடங்களையும் அதிகாரிகள் சோதனையிட்டனர்.

## கடத்தல் சகோதரர்கள்

கடத்தல் சகோதரர்கள் என்று கூறப்படுகிற தொலாரியா சகோதரர்களில் இருவர் கைது செய்யப்பட்டுவிட்டனர். மற்றொருவரைக் கைது செய்ய வாரண்டு பிறப்பிக்கப்பட்டுள்ளது.

இதற்கிடையே பம்பாய் வங்கி பாதுகாப்பு பெட்டகங்களில் வைக்கப்பட்டிருந்த 8 லட்சம் ரூபாய் மதிப்புள்ள நகைகள், ரொக்கம் முதலியவை கைப்பற்றப்பட்டன.

அன்னிய செலாவணி மோசடியில் ஈடுபட்டிருந்ததாக சூரத் நகரில் ஒரு நகை வியாபாரியும், ஒரு வைர வியாபாரியும் கைது செய்யப்பட்டனர்.

## யாசின் கூட்டாளி கைது

அன்னியச் செலாவணி மோசடி சம்பந்தமாக அகமது கபீர் நேற்று ராமநாதபுரம் அருகே பண்ணைக்குளம் என்ற இடத்தில் கைது செய்யப்பட்டார். கடத்தல் மன்னர் என்று கூறப்படுகிற யாசினுக்கு கூட்டாளியாக கபீர் வேலை செய்ததாக கூறப்படுகிறது.

## பத்திரிகை நிருபர் மாமனர் மரணம்

சென்னை, அக். 18—சென்னை நிருபர்கள் சங்கத்தின் பொருளாளரும் "தினமலர்" பத்திரிகையின் சென்னை நிருபருமான எம். ராஜாராமின் மாமனர் முத்துவெள்ளை நாயுடு (73 வயது) சின்னமனூரில் காலமானார். அன்னாருக்கு மனைவியும் மூன்று மகன்களும் மூன்று மகள்களும் உள்ளார்கள்.

'புதிய மனிதன்' ஜெய்சங்கரை ஆலம் யார் என்று பாக்கின்றுரா?

# 'எலக்ட்ரிக் பல்ப்' உடை அணிந்து ஜெயசுதா கமலஹாசன் நடனம்

மின்சார பல்புகளால் ஆன ஆடைகளை அணிந்துகொண்டு ஜெயசுதாவும், கமலஹாசனும் நடனமாடும் காட்சி ஒன்றை புதுமையான முறையில் படமாக்கினர்.

சி. என். வி. மூவிஸ் தயாரிக்கும் 'மேல் நாட்டு மருமகள்' படத்திற்காக இக்காட்சி படமாக்கப்பட்டது.

தனது முறை மாப்பிள்ளையான சிவகுமார் வெளிநாடு சென்று வேறொரு பெண்ணை மணந்து கொண்டு திரும்பியதைக் கண்டு மனம் உடைந்து 'கிளப்' ஒன்றில் ஜெயசுதா வந்து அமர்கிறு.

அங்கு கமலஹாசன் கவர்ச்சிப் பாவையுடன் ஆடிப்பாடிக் கொண்டிருக்கிறு. இந்த சமயத்தில் — ஜெயசுதாவின் முரடர்கள் சிலர் குறும்பாகப் பேசுகின்றனர், கமலஹாசன் ஓடி வந்து அவர்களைத் தாக்கி விரட்டுகிருர் ஜெயசுதா பார்வையால் கமலஹாசனுக்கு நன்றி கூறுகிருர்.

இருவரும் பார்வையைப் பரிமாறிக் கொள்கின்றனர். இக்காட்சி விக்ரம் ஸ்டுடியோவில் மேல்நாட்டு மருமகள் படத்திற்காகப் படமாக்கப்பட்டது.

ஏ. பி. நாகராஜன் கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிருர்.

மின்சார பல்ப் நடனத்தை தங்கப்பன் புதுமையான முறையில் அமைத்துள்ளார்.

# நவமணி திரை உலகம்

## 'உயிரோடு விட்டுவிடு' ஜெயசித்ரா கெஞ்சல்

ராதா அழகானப் பெண். பணக்காரியாகவும் இருந்து விட்டாள். அவளைச் சுற்றி அவளுடைய தாய்மாமனும், அவனுடைய கையாளும் இருந்தார்கள். அவளைக் கொலை செய்துவிட்டு பணத்தை அபகரிக்க சமயம் பார்த்துக் கொண்டிருந்தார்கள்

இடையில் அவள் தந்தை கொலை செய்யப்பட்டதால் மன அதிர்ச்சி அடைந்திருந்தாள்.

ஆகவே அவள் யாரைப் பார்த்தாலும் தன்னைக் கொலை செய்ய வருவதாக எண்ணிக்கொண்டு கதறுவாள். இதற்கிடையில் அவள் காதலித்த வாலிபன் ராஜாவும் அந்த வீட்டுக்கு அவளைப் பார்க்க வரும் முன் வந்தவனுக்கு அவள் சித்தப்பிரமையால் பாதிக்கப்பட்டிருப்பதாக செய்தி கிடைக்கிறது. சில நாள் அங்கு தங்கிவிட்டு போக எண்ணுகிருன். இரவில் அந்த வீட்டில் மர்மமாக நாடகங்கள் நடப்பதை அறியத் துடிக்கிருன்.

ஒருநாள் ராதாவை படுக்கை அறையில் சந்திக்க செல்கிருன். ஆனல் அவளோ அவனை பார்த்தவுடனே பயந்து போய்விடுகிருள்.

''என்னை தயவு செய்து கொன்றுவிடாதே, என்னை உயிரோடு வாழவிடு, என் பணத்தை எல்லாம் எடுத்துக் கொள்'' என்று பைத்தியம் பிடித்தவள் போல் கத்துகிருள்.

''ராதா? உன் பைத்தியக்காரத் தனத்துக்கு ஒரு முடிவே இல்லையா? என் உற்ருர் உறவினர் நண்பர்களைகூட உனக்காக மறந்து வந்தேன். இனி எனக்கு இங்கு வேலை யில்லை. நான் மன நிம்மதி யிழந்து மதிப்பில்லாமல் இங்கு வாழ விரும்பவில்லை'' என்று ராஜா வேகமாகப் போய்விடுகிருன்.

இக் காட்சி திருத்தணி பிக்சர்ஸாரின் 'பணக்கார பெண்' படத்துக்காக விக்ரம் ஸ்டுடியோவில் படமாக்கப்பட்டது. ராஜாவாக ஜெய்சங்கரும், ராதாவாக ஜெயசித்ராவும் நடித்தார்கள்.

துறையூர் மூர்த்தி கதை வசனம் எழுதுகிருர். யு. ராஜேந்திரன. டைரக்ட் செய்கிருர்.

''பரிமளம்'' படத்தில் நிறைமதி, குமார், நிர்மலா.

## அபர்ணு நாட்டிய அரங்கேற்றம்

செல்வி அபர்ணு நாட்டிய அரங்கேற்றம் நேற்று மாலை கலைவாணர் அரங்கேற்றத்தில் நடைபெற்றது.

கிருஷ்ணசாமி ஐ. ஏ. எஸ், தலைமை வகித்தார்.

உயர்நீதி மன்ற பிரதம நீதிபதி கே.வீராசாமி கலந்து கொண்டு குமாரி அபர்ணுவை யும் கிருஷ்ணகான நாட்டிய ஆசிரியை ஜானகி பாஷ்யத்தையும் பாராட்டினுர்.

''கட்டிலில் பள்ளி கொண்ட
கன்னி இள மானே
கட்டி உன்னை அணைத்து
கனியிதழைச் சுவைப்பேனே''

''அன்பைத்தேடி'' படத்தில் சிவாஜி கணேசன், ஜெயலலிதா.

## சிவகுமார் நடிக்கும் 'புது வெள்ளம்' படப்பிடிப்பு துவங்கியது

சிவகுமார் நடிக்கும் 'புது வெள்ளம்' வண்ணப்படத்தின் துவக்க விழா நேற்று பிரசாத் ஸ்டுடியோவில் நடைபெற்றது.

கன்னடத்தில் 'சப்பத்திகே சவால்' என்ற பெயரில் வெளி வந்து வெள்ளிவிழா கொண்டாடிய படம்.

இதை என். வி. ராமசாமி தமிழில் வண்ணப்படமாகத் தயாரிக்கிருர்.

நடிகர் ராஜ்குமார் கேமராவை முடுக்கி படப்பிடிப்பைத் துவக்கி வைத்தார்.

இந்தப் படத்தில் சிவகுமார், மனேகர், எம். ஆர். ஆர். வாசு. வி. கோபாலகிருஷ்ணன், சாவித்திரி, புஷ்பலதா ஆகியோர் நடிக்கின்றனர்.

கன்னடப் படத்தில் கதாநாயகியாக நடித்த புதுமுகம் குமாரி மஞ்சுளா தமிழ்ப்படவுலகிற்கு புதிய கதாநாயகியாக அறிமுகமாகிருர்.

என். பாஸ்கர் வசனத்தையும், வாலி பாடல்களையும் எழுதுகின்றனர்.

எம். பி. சீனிவாசன் இசையமைக்கிருர்.

என். விஜயன் டைரக்ட் செய்கிருர்.

## கண்ணுக்கு இமை காவல்

ஸ்ரீ ரேணுகாலயா மூவிசார் 'கண்ணுக்குஇமைகாவல்' என்ற புதிய படம் ஒன்றை தயாரிக்கின்றனர். இப்படத்தின் கதை வசனத்தை என். தேவநாதன் எழுதுகிருர். இசையமைப்பு டி. பத்மன், திரைக்கதை டைரக்ஷன் தயாரிப்பு வி. என். கே. பாணி.

இப்படத்தில் ஜெய்சங்கர், லட்சுமி முக்கிய வேடத்தில் நடிப்பார்கள் என்று தெரிகிறது.

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-600028, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Chief Editor: S. V. G. Sowrirajulu.

Honorary Editor: N. Muthukumarasami.

## எங்கம்மா சபதம்

தந்தை காணுமற் போனதற்குக் காரணமான முதலாளியைப் பழிக்குப் பழி வாங்குமாறு தன்பெண்களிடம் தாய் கூறுகிருள். ஒற்றுமைக்கே உதாரணமாகத் திகழும முதலாளியின் குடும்பத்தில் பெண்கள் இருவரும்புகுந்து அவரது பிள்ளைகளைக் காதலித்து, மணந்துகொண்டு குழப்பத்தைஉண்டாக்குகின்றனர். முடிவில் குழப்பம் நீங்குகிறது இதுதான் 'எங்கம்மா சபதம்' கதை!

### விமர்சனம்

மூலக்கதையை ஆர். செல்வராஜ் அழகாகப் பின்னியிருக்கிருர்.

திரைக்கதை வசனம் எழுதியுள்ள பஞ்சு அருணுசலம் பணி நிறைவாக உள்ளது.

விரசமாக வசனம் எழுதக் கூடிய கட்டங்களில்கூட நாசுக்காக ரசமாக வசனம் எழுதியுள்ளதைப் பாராட்ட வேண்டும் உதாரணமாக வேலைக்காரிக்கும் முதலாளிக்கும் தொடர்புபடுத்திக்கூறும் கட்டங்கள் நகைச்சுவைக்குப் பெரிதும் பயன்படுத்தப் பட்டிருக்கிறதே தவிர விரசமாக இல்லை.

இந்தப்பாராட்டில் டைரக்டருக்கும் பெரும் பங்கு உண்டு.

### முத்துச் சிரிப்பு

முத்துராமன் கால்நடை டாக்டராக வருகிருர். தம்பி மனைவி குளிக்கும்போது பார்த்துவிட்டு முத்துராமன் தவியாய்த் தவிப்பது, இரவில் மனேரமாவிடம் நெருங்கும் அசோகனிடம் 'இந்த வயதில் இப்படி ஒரு ஆசை' என்று தலையில் அடித்துக்கொண்டு கூறுவதும் சுவையான காட்சிகள்.

### நகைச்சுவை குமார்

முத்துராமன் தம்பியாக டாக்டராக சிவகுமார் நடித்திருக்கிருர். இரவில் நடக்கும் வியாதி உள்ள பெண்ணைத் துரத்திச் செல்லும் கட்டத்திலும், மற்ற காட்சிகளிலும் அவரது முகபாவங்களும், சேஷ்டைகளும் சிரிப்பை வரவழைக்கின்றன.

முத்துராமன், சிவகுமார் இருவரும் அப்பாவிகளாக அருமையாக நடித்து கலகலப்பூட்டுகின்றனர்.

ஜெயசித்ரா. விதுபாலா இருவரும் நடிப்பதற்கு உள்ள வாய்ப்பை நன்கு பயன்படுத்திக் கொண்டுள்ளனர். சண்டை போடுவதிலும் சளைக்கவில்லை. வில்லிகள்போல் கதையை இயக்கும் கதாநாயகிகளாக வரும் புதுமையான கதாபாத்திரங்கள். இருவரும் சோடை போகவில்லை.

அசோகன் அமைதியாக வந்து அழகாக நடித்திருக்கிருர்.

தேங்காய் சீனிவாசன் மனேரமா, வெண்ணிற ஆடை மூர்த்தி 'சுருளிராஜன் ஆகியோரின் நகைச்சுவை படத்தின் விறுவிறுப்பிற்கு உதவுகின்றது

மேஜர் சுந்தர்ராஜன், சுகுமாரி, எம் என். ராஜம் ஆகியோர் குறையின்றி நடித்துள்ளனர்

பாபு ஒளிப்பதிவு முதல் தரம். கனவுக் காட்சிகளை அவர் படமாக்கியுள்ள முறை அற்புதம். ஷெட்டிங்கும் சிறப்பாக உள்ளது.

விஜயபாஸ்கர் இசையில் அன்பு மகமே இங்கு ஓடிவா' கண்ணதாசன் பாடல் இனிமையாக ஒலிக்கிறது.

### டைரக்ஷன்

சிக்கலில்லாமல், விறுவிறுப்பு குறையாமல். சிரித்து மகிழத்தக்க வகையில் நேர்த்தியாக எஸ். பி. முத்துராமன் இயக்கியுள்ளார். படத்தின் இறுதிக் காட்சிகள் அவருடைய திறமைக்குச் சான்ருக உள்ளன.

மொத்தத்தில் —

சிரிப்பு விருந்து

## வாணி ஜெயராம் சகோதரி விமலாவுக்கு பரிசு

பின்னணிப் பாடகி வாணி ஜெயராம் சகோதரி விமலாவுக்கு சரஸ்வதி ஸ்டோர்ஸ் சார்பில் டி. கே பட்டம்மாள் தம்புரா ஒன்றை வழங்கினுர்.

முத்துசாமி தீட்சிதரின் 200 வது ஆண்டு விழாவை முன்னிட்டு கிருஷ்ணகான சபாவினர் 57 கர்னுடக இசை நிகழ்ச்சிகளை நடத்தினர்.

சிறந்த கர்னுடகப் பாடகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட டி. விமலாவுக்கு தலைமை வகித்த டி. கே. பட்டம்மாள் தம்புராவையும் நற்சான்றிதழையும் பரிசாக வழங்கினுர்.

சிறந்த வயலின் வித்வான் பாடகர், பாடகியருக்கும் பரிசு வழங்கப்பட்டது.

வாணி ஜெயராமின் சகோதரிகள் ஐந்து பேர். இவர்களில் முதல் பரிசு பெற்ற விமலாவும் ஒருவர். சகோதரிகள் யாவரும் சங்கீதத்தில் தேர்ச்சி பெற்றவர்கள்.

பரிசு பெற்ற டி. விமலா இதுவரை ஆயிரக் கணக்கான இசை நிகழ்ச்சிகளை நடத்தியுள்ளார்.

''கருணைக் கடல்'' படத்தில் அசோகன், ராஜஸ்ரீ

## கர்ணன் அமைத்த கண்ணுடி மாளிகை

டைரக்டர் கர்ணன் ''எங்க பாட்டன் சொத்து'' படத்திற்காக கண்ணுடி மாளிகை ஒன்றை உருவாக்கியிருந்தார். சுற்றிலும் நிலைக்கண்ணுடிகள் பதிக்கப்பட்ட அந்த கண்ணுடி மாளிகை புதுமையான முறையில் அமைக்கப்பட்டிருந்தது.

உள்ளேயே கேமராவை வைத்து கர்ணன் பல காட்சிகளை படமாக்கினுர். சுற்றிலும் கண்ணுடிகள் இருந்தாலும் படமாக்கப்படுவது கண்ணுடிகளில் தெரியவில்லை

இந்த மாளிகையில் கவர்ச்சி உடையில் புளோரி குழுவினர் நடனக் காட்சிகள் படமாக்கப்பட்டன.

முடிவில் ஜெய்சங்கரும் அசோகனும் மோதுவது போன்ற சண்டைக் காட்சிகள் படமாக்கப்பட்டன.

பல்லாயிரக் கணக்கான ரூபாய் செலவில் அமைக்கப்பட்ட இந்தக் கண்ணுடி மாளிகை இந்த சண்டைக் காட்சியின் போது உடைத்து நொறுக்கப்பட்டது.

டைரக்டர் கர்ணன் புதுமையாக அருமையாக நடனக் காட்சிகளையும், சண்டைக் காட்சிகளையும் படமாக்கி இருக்கிருர்

குருசாமி கதை, வசனம் எழுதுகிருர்.

## 'கடவுள் இருக்கானு?'

''இருக்கானு கடவுள்
இருந்தால் ஏன் இன்னும்
வரவில்லை உலகை
எதற்கு படைத்தானே?''

என்ற பாடலின் காட்சியை ''கருணைக்கடல் கிறிஸ்து'' படத்திற்காக மகாபலிபுரத்தில் படமாக்கினுர்கள்.

குயிலன் பாடலை ஜேசுதாஸ் பாட பி. கோபால் இசையமைத்துள்ளார்.

ஏ. கே. வேலன் வசனம் எழுதுகிருர்.

ஜெய்குமாரியின் கவர்ச்சித் தோற்றம்.